## IV. GOVERNMENT MOTION.

**TRANSACTION OF GOVERNMENT BUSINESS ON A NON-OFFICIAL DAY.**

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"That rule 23 of the Assembly Rules be suspended and the House do resolveto transact Government business on Thursday, the 21st September 1961."

DEPUTY SPEAKER : The question is—

" That rule 23 of the Assembly Rules be suspended and the House do resolve to transact Government business on Thursday, the 21st September 1961."

The motion was put and carried.

## V. GOVERNMENT BILL

### THE MADRAS LAND REFORMS (FIXATION OF CEILING ON LAND) BILL, 1960 (L.A. BILL NO. 8 OF 1960) AS AMENDED BY THE JOINT SELECT COMMITTEE —*cont.*

*Clause* 3 (*sub-clause* 11).

**SRI M. KALYANASUNDARAM** : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, என்னுடைய திருத்தம் இந்தச் சட்டம் அமுலாகும் தேதி குறித்தது. இந்தச் சட்டம் அமுலுக்கு வரவேண்டிய தேதி குறைந்த பட்சம் 1955-ம் வருஷத்திலிருந்து இருக்க வேண்டும் என்பது என்னுடைய கருத்து. அதிலே கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை நான் உணராமலில்லை. அந்தக்கஷ்டங்களை எப்படி நிவர்த்தி செய்யலாம் என்று பின்னால் யோசனை கூற விரும்புகிறேன். செலெக்ட் கமிட்டியிலும் அந்த யோசனைகளைக் கூறியிருக்கிறேன். ஆனால் அவை ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஏன் இதில் அவசியம் இருக்கிறது என்பதை நாம் பார்க்க வேண்டும். இந்த மசோதாவினுடைய நோக்கமே நிறைவேற வேண்டுமானால், நிலம் ஒரு சிலர் கையில் குவிந்திருப்பதை பரவலாகப் பிரித்துக் கொடுக்கவேண்டும் என்ற எண்ணம் நிறைவேறவேண்டுமானால், சாகுபடி நிலத்தில் இருந்து விவசாயிகள் வெளியேற்றப்படாமல் இருக்க வேண்டும். அதற்குப் பாதுகாப்புக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் நிறைவேற்றப்பட வேண்டுமானால், இந்தச் சட்டம் வரும் என்று எதிர் பார்த்து, அந்தச் சட்டத்தை ஏமாற்றச் செய்த நடவடிக்கைகளெல்லாம் ரத்தாகக் கூடிய முறையில் நம்முடைய சட்டம் இருக்க வேண்டும். இந்தச் சட்டம் கொண்டுவந்திருக்கக் கூடிய முறையே வேறு. எப்போது 1955-ம் வருஷம் மற்ற நடவடிக்கைகள் எடுக்கப்பட்டனவோ, சாகுபடியாளர் பாதுக்கப்புச் சட்டம், நியாய வாரச் சட்டம் இரண்டும் இயற்றப்பட்டவுடனேயே, ஒரு அவசரச் சட்டம் கொண்டு வரப்பட்டு, பூமி மாற்றங்களைத் தடுக்க தடை விதித்து, அப்புறம் இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்திருந்தால் இந்தமாதிரி பூமி மாற்றங்களுக்கு இடமேற்பட்டிருக்காது. இதிலே 5 வருஷ அவகாசம் கொடுத்திருக்கிறார்கள். 1955-ம் வருஷம் கவர்னர் உரையில் மூன்று கட்டங்களில் நிலச் சீர்திருத்தம் கொண்டு வரப்படும், இந்த மூன்று கட்டங்களும் 1956-ம் ஆண்டுக்குள் முடிவுறும் என்று சுட்டிக்காட்டியிருந்தார்கள். முதல் கட்டம் 1955-ம் வருஷம். அப்போது சாகுபடியாளர் பாதுகாப்புச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. 1956-ல் நியாய வாரச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. நிலச் சீர்திருத்தச் சட்டம் 1957-க்குள்ளாவது நிறைவேற்றப்படும் என்று எதிர் பார்க்கப்பட்டது அதுதான் கொடுக்கப்பட்ட வாக்குறுதி. ஆனால் இந்த மசோ